

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

**ஹேவிளம்பி – ஐப்பசி – 2017 – அக்டோபர்**

23.09.2017 அன்று கோவிலூரில் நடைபெற்ற நிறுவனர் நாள் விழா
இயக்குநர் SP. முத்துராமன், கோவிலூர் ஆதீனம், நீதி அரசர் மகாதேவன்,
முனைவர் சே. குமரப்பன் மற்றும் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி - ஐப்பசி - 2017 - அக்டோபர் இதழ் - 64

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்


KOVILOOR ANDAVAR
A. No. 64
LIBRARY, KOVILOOR

# இறை வணக்கம்

கங்காளம் கையேந்தும் கயிலை வாசி
கானப்பேர் உவந்திருக்கும் கடவுள் வந்து
கைதொழுவார் தமக்கருளும் நெற்றிக் கண்ணன்
கங்கையெனும் மங்கையினைச் சென்னி தாங்கிக்
கழனிநகர் தனில்தோன்றி நம்மைக் காக்கும்
கண்ணாளன் தன்னுடலில் பாதி கொண்ட
மங்கையுமை தனக்கருளி மகிழ்ந்தி ருக்கும்
மகராசன் மன்னவனை வரவ ழைத்து
மாபெரிய திருக்கோவில் கட்ட வைத்தான்
அங்கையில் அனலேந்தி ஆடு வானை
ஆளனென மணந்தாளை நெல்லை என்னும்
ஆரணங்கை வணங்கினால் அல்லல் தீரும்.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

## ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

குருகுல வாசம் முறைப்படி, கல்வி கற்பதை நம் முன்னோர்கள் கடைப்பிடித்து வந்தார்கள். இளம் வயதிலே ஆசிரியரைத் தேர்ந்தெடுத்து அவரை முறைப்படி அணுகித் தன்னுடைய மகனை அவர்கள் வீட்டில் தங்கிப் படிக்கச் செய்வதே குருகுலவாசக் கல்வி முறை. இந்தக் கல்வி முறைகளிலே பலவிதமான நன்மைகளும் மேம்பாடுகளும் இருந்தன. முழுமையாகக் கவனம் செலுத்திக் கற்பதற்கு ஏற்ற சூழல், ஒழுக்க முறைகளைக் கற்று வளர்கின்ற பக்குவம் அனைத்தும் கிடைத்தன. ஆசிரியர் மூலம் கேட்டுக் கற்கிற கல்வியிலே கேட்பது மற்றும் படிப்பது இரண்டும் சித்திக்கும். அதன் மூலமாகக் கல்வி மேம்படும். இதனை சிரவனம் என்று சொல்வார்கள். கேள்விச் செல்வம் கற்றலில் கேட்பது நன்று என்ற பெருமைக்குரியது. அடுத்து அதனை மனதிலே நிறுத்தி அலசி ஆராய்ந்து முழுமையாகப் புரிந்துகொள்கிற வாய்ப்பும் கிடைக்கும். இதனை மனனம் என்பார்கள் (மனனம் என்பது மனப்பாடம் செய்வதை மட்டும் குறிப்பது அல்ல) பலமுறை யோசித்து, கேட்ட பாடத்தின் பொருளை நன்கு புரிந்து கொண்டு மனதில் பதிவு செய்து கொள்வதே மனனம் எனப்படும்.

இப்படி மனதிலே பதிவு செய்த பாடங்களை, கருத்துக்களை மீண்டும் மீண்டும் சிந்தித்து அலசி ஆராய்ந்து அடுத்த பாடம் கேட்கும்வரை அதே நினைப்பிலே தியானம் போல ஆழ்ந்து இருப்பது நிதித்தியாசனம் எனப்படும். இப்படி சிரவனம், மனனம், நிதித்தியாசனம் என்று முறையாகக் கற்ற பாடங்களின் கருத்துக்கள் மிக நீண்ட நாட்கள் மனதிலே நிலைத்திருக்கும் என்பது தெளிவு. இந்த முறையிலே கற்பதால் குருகுலவாசம் என்று அழைக்கப்பட்டது. முந்தைய காலங்களிலே நம் நாட்டில் கற்றவர்கள் என்போர் மேன்மைக் குணம் படைத்தவர்களாக இருந்தார்கள் என்பது நம்முடைய வரலாறு.

வேதாந்த காலத்தில் குருமார்கள் எட்டு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளார்கள். உலகிலே பொருளும், புகழும் சேர்ப்பதற்கு வழி சொல்லிக் கொடுக்கின்ற குரு வேத குரு என்றழைக்கப்பட்டார். இவர் யாகமுறைகளையும் கர்மம் என்கின்ற செய்முறைகளையும் விளக்கிச் சொல்லி உலகியல் வாழ்க்கைக்குத் தேவையானவற்றைப் பெறுவதற்கு வழிகாட்டும் குரு. அறநூல்களைப் போதித்து நன்னெறிகளைக் கடைப்பிடிக்கச் செய்து இப்பிறவியிலும் மறுபிறவி உண்டாகில் அப்போதும் வளங்களையும், சுகங்களையும் பெற வழகாட்டுபவர் காமியகுரு என்று அழைக்கப்பட்டார்.

மாணவனுக்கு விவேகத்தை உண்டாக்கி அதன் மூலமாக வாழ்வினுடைய வாழ்வியல் பக்குவம், ஆன்மீகப் பக்குவம் வர வழி காட்டுபவர் சுகக குரு. ஆன்மீகத்திலே விருப்பம் உண்டாக்கி இறைப்பொருளை உணர/அடைய வழிகாட்டும் குரு வாசககுரு. ஜீவ பிரம்மம் ஐக்கியத்திற்கு வழி காட்டும் குரு காரககுரு. சாதகம் செய்கின்ற காலத்திலே தனக்கு ஏற்படும் ஐயங்கள், மயக்கங்கள் ஆகியவற்றை நீக்கி வழிகாட்டக் கூடியவர் விகித குரு. மந்திர தந்திர மாந்தீரியங்கள் வழியாக வேண்டியவர்க்கு நன்மையும், வேண்டாவதர்க்குத் தீமையும் செய்கின்ற வழிமுறை சொல்லிக் கொடுப்பவர் நிதித குரு என்று அழைப்படுகின்றார். இந்தச் செயல்களைச் செய்பவர்கள் இம்மையிலும் மறுமையிலும் துன்பங்களையே அனுபவிப்பார்கள்.

இவ்வாறு மாணவனுடைய பக்குவ நிலையை அறிந்து அவனுக்கு ஏற்றவாறு போதித்து இறை உணர்வை ஏற்படுத்தி இறைவனை உணர/அடைய வழிகாட்டி மேன்மையான கல்விமுறை கற்பிப்பதே நம்முடைய பாரம்பரியமான குருகுருலவாசக் கல்வி முறை.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## நல்லன எல்லாம் தரும் இறைவன் திருவடி

(டி.ஆர்.குருமூர்த்தி, பேராசிரியர் & துறைத்தலைவர்
வணிகவியல் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி)

இந்த மண்ணில் மனிதனின் மிகப் பெரிய பரிசு இறையருளாகும். எத்துணை செல்வங்கள் இருப்பினும், இறையருளே செல்வத்தின் செல்வமாகக் கருதப்படும். அரசர்கள் ஆண்டுக்கணக்கில் பெரும்பொருள் செலவிட்டுக் கட்டுகின்ற கோவில்களை விட, அடியார்கள் இறைவனையே எப்பொழுதும் நினைத்து உருகி, தினைத்தனைப் பொழுதும் மறந்து உய்வனோ எனத் தனது உள்ளத்திலே கட்டுகின்ற கோயில்கள் முதன்மையானவைகளாக ஏற்கப்படும். இறையருள் என்பது தெய்வீகம். நிரந்தரத் தூய்மையானது. இறையருள் பெறுபவர் பலரும் போற்றத்தக்க தூயவராக வாழ்ந்திடலாம். உலக வாழ்வின் இன்பங்களையும் துன்பங்களையும் உணர்ந்து துன்பங்களிலிருந்து விடுபட இறையருள் உதவிடும்.

தனம் தரும் கல்வி தரும் ஒருநாளும் தளர்வறியா
மனம் தரும் தெய்வ வடிவும் தரும் நெஞ்சில் வஞ்சமில்லா
இனம் தரும் நல்லன எல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே
தனம் தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே

என அபிராமி பட்டர் தனது திருவந்தாதியிலே அபிராமி அம்மையின் அருட்சிறப்பினை விளக்கியுள்ளார்.

சிவனவன் என்சிந்தையில் நின்றதனால்
அவனருளாலே அவன்தாள் வணங்கி
சிந்தை மகிழச் சிவபுராணம் தன்னை
முந்தை வினைமுழுவதும் ஓய உரைப்பன்யான்

என மாணிக்கவாசகர் தமது சிவபுராணத்திலே தெரிவிக்கின்றார். மாணிக்கவாசகர் சிவனைத் தமது சிந்தையில் வைத்திருந்தார். இறைவனை வணங்குவதற்குக் கூட இறைவனின் அருள் வேண்டும். இறைவனை நாம் நம்மனதில் தங்க வைத்து நினைந்துருகும் போது தான் இறைவன் நம்மைத் தமது அருட்கடலில் ஆட்கொள்வார். பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து நம்மை ஆட்கொண்டு அருள் செய்வார்.

சிவனடியார்களுக்குச் செய்யப்படும் தொண்டுகள் அனைத்தும் இறைவனைப் போய்ச் சேர்கின்றன. இறைவனுக்குச் செய்யும் தொண்டாகக் கருதப்படுகின்றன எனத் திருமந்திரம் சொல்கின்றது. மக்கள் பணியே மகேசன் பணி என்பதனை உணர்த்துகின்றது.

படமாடக் கோயில் பரமற்கு ஒன்றுஈயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கு அங்கு ஆகா
நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்றுஈயின்
படமாடக் கோயில் பரமற்கு அதுஆமே.

*திருமந்திரம் : 1857*

படமாடக் கோவிலிலே வீற்றிருக்கின்ற இறைவனுக்குச் செய்கின்ற அபிடேக ஆராதனைகளும் மற்றும் இதர கைங்கரியங்களும், இறையடியார்களுக்கு வந்தடையாது. இறையடியார்களுக்குச் சேவை செய்ததாக ஆகாது. ஆனால் நடமாடக் கோயிலாக இருக்கின்ற சிவனடியார்களுக்குச் செய்கின்ற சேவைகள் அனைத்தும் இறைவனுக்குப் போய்ச் சேரும் எனத் திருமூலர் அறிவுறுத்துகின்றார். சிவனடியார்கட்குச் செய்கின்ற சேவைகள் இறையருள் பெற்றிட உதவும் என்பது தெரிவிக்கப்படுகின்றது. நாயன்மார்களை இக்கருத்திற்கு ஆதாரமாகவும் உதாரணமாகவும் நாம் எடுத்துக் கொள்ளலாம்.

திருஞானசம்பந்தர் தமது திருநீலகண்டப் பதிகத்தில் இறைவனின் திருவடியை வணங்குவதால் அகலும் தீவினைகளைப் பட்டியலிடுகின்றார்.

கைவினை செய்துஎம் பிரான்கழல் போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா
தீவினை வந்தெமைத் தீண்டப்பெறா
சிலைத்தெமைத் தீவினை தீண்டப்பெறா
செற்றெமைத் தீவினை தீண்டப்பெறா
சிறப்பிலித் தீவினை தீண்டப்பெறா
திருவிலித் தீவினை தீண்டப்பெறா
சீற்ற தாம்வினை தீண்டப்பெறா
தீக்குழித் தீவினை தீண்டப்பெறா

எம்பிரான் கழல் போற்றி வணங்குவதால், மேற்கூறிய தீவினைகள் நம்மைத் தீண்டாது எனத் திருஞான சம்பந்தர் இறையருளின் மேன்மையினை நமக்கு விளக்குகின்றார். தீவினைகள் தீண்டவில்லையென்றாலே நலமான வாழ்வு நம்மைச் சார்ந்துள்ளது என்பதுதானே பொருள். நலமான வாழ்விற்கு இறையருள் சேர்ப்போம். அடியவர்க்கு உரியதை ஆண்டவன் அறிவார். அதை நிச்சயம் தருவார். வேண்டும் பரிசு ஒன்று உண்டென்னில் அதுவும் உந்தன் விருப்பன்றே என மாணிக்கவாசகர் குறிப்பிடுகின்றார். அல்வினை அகற்றி நல்வினை செய்யின் அதற்குரிய பரிசு நிச்சயம் உண்டு. அல்வினை அகற்றும் பண்பும் நல்வினை ஆற்றும் மாண்பும் இறையருளால் கிட்டும்.

தம்மைத் தூய்மை செய்து தமது உள்ளத்தைத் தூய்மை செய்து தூயவனான இறைவனுக்காக உள்ளத்திலே கோயில் அமைத்து இறைவனை நினைந்து உருகி எங்கும் இறைவன் என்கிற பரந்த நோக்கத்துடன் வாழும் அடியார்களுக்கு இறையருள் கைக்கூடும். நமச்சிவாயவே ஞானமும் கல்வியும், நமச்சிவாயவே நன்னெறி காட்டுமே என்பது திருநாவுக்கரசரின் அமுதவாக்கு. சைவ சித்தாந்த, திவ்ய பிரபந்த நூல்களைப் படிப்பதால் மட்டுமே இறையருள் வித்திடாது. புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவதால் இறையருள் கிடைத்திடாது என்பதைத் திருநாவுக்கரசர் கீழ்க்காணும் பாடலில் விளக்குகின்றார்.

கங்கை ஆடில்என் காவிரி ஆடில்என்
கொங்கு தண்கும ரித்துறை ஆடில்என்
ஓங்கு மாகடல் ஓதநீர் ஆடில்என்
எங்கும் ஈசன் எனாதவர்க்கு இல்லையே

பட்டர் ஆகில்என் சாத்திரம் கேட்கில்என்
இட்டும் அட்டியும் ஈதொழில் பூணில்என்

வேதம் ஓதில்என் வேள்விகள் செய்யில்என்
நீதி நூல்பல நித்தம் பயிற்றில்என்

ஒன்று நோற்கில்என் பட்டினி யாகில்என்
குன்றம் ஏறி இருந்தவம் செய்யில் என்

எங்கும் ஈசன் இருக்கிறான் என்று எண்ணாது, உள்ளம் உருகித் தொழாது இருப்பவர்கள், கங்கை, காவிரி, குமரி, ஏனைய அலை

ஆடும் கடல்களில் நீராடுவதால் பயன் என்ன இருக்கின்றது என அப்பர் வினா எழுப்புகின்றார். பட்டங்கள் பெறுதல், சாத்திரங்கள் கேட்டல், அன்னதானம் செய்தல், வேதம் ஓதுதல், வேள்விகள் செய்தல், நீதி நூல்களைப் படித்தல், நோன்பு இருத்தல், பட்டினி கிடத்தல், குன்றில் அமர்ந்து தவம் செய்தல் ஆகிய இவை மட்டுமே இறையருள் பெற்றிட உதவிடும் என்று எண்ணிவிடக் கூடாது. இறைவனை நெஞ்சில் தாங்கித் தமது நல்ல எண்ணங்களாலும் நல்ல செயல்களாலும், நல்ஒழுக்கத்தாலும் நீராட்ட வேண்டும். தனிநபர் தூய்மையடைவார். உலகம் தூய்மை பெறும்; இன்புறும். மாணிக்கவாசகர், இறைவனது திருவடிகளின் சிறப்பினைச் சொல்லித்தான் சிவபுராணம் தொடங்குகின்றார். இதிலிருந்து திருவடிச் சிறப்பினை நாம் தெரிந்து கொள்ளலாம். மாணிக்கவாசகர் தமது திருச்சதகத்திலே, வருக என்று என்னை நின்பால் வாங்கிட வேண்டும் போற்றி, தருக நின்பாதம் போற்றி, தமியனேன் தனிமை தீர்த்தே என்றுரைக்கிறார். இறைவனிடத்திலே தருக நின்பாதம் என வேண்டுகின்றார். இதுவே இறையருள் என உணரப்படுகின்றது.

இறையருளுக்கு ஐந்து ஒடுங்கல் அடிப்படைத் தவம் எனத் திருமூலர் தெரிவிக்கின்றார். ஐந்து ஒடுங்கல் என்பது ஐம்புலன் அடக்கம் என்று பொருள். புலனடக்கம், அகல் இடம் தரும், பரந்த உயர்ந்த இடம் கிட்டும், அருந்தவமாகக் கருதப்படும். புலனடக்கத்தால் இறைவனின் திருப்பாதம் பெற்றுப் பணிந்து இறையருள் பெறலாம்.

ஐந்தில் ஒடுங்கில் அகல்இடம் ஆவது
ஐந்தில் ஒடுங்கில் அருந்தவம் ஆவது
ஐந்தில் ஒடுங்கில் அரன்பதம் ஆவது
ஐந்தில் ஒடுங்கில் அருள்உடை யாரே. *திருமந்திரம் : 2035*

மூவிலை வேல்பிடித்து, தீநிறமாய் இருக்கும் எம்ஈசன் அருள் இருப்பதால் எத்தீ புகினும் எமக்கு ஒரு தீதில்லை எனத் திருநாவுக்கரசர் தெரிவிக்கின்றார். வலஞ்சுழி ஈசனைப் பாதம் ஏத்தப் பறையும் நம்பாவமே – வலஞ்சுழிவானை உள்ளம் உருகித் தொழ, நம்பாவங்கள் அனைத்தும் அகலும். இறையருள் நமது பாவங்களை நீக்கி, நம்மைக் காக்கும்.

மலையே வந்து விழினும் மனிதர்காள்
நிலையில் நின்று கலங்கப் பெறுதிரேல்

தலைவ னாகிய ஈசன் தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே

பெருக லாம்தவம் பேதைமை தீரலாம்
திருக லாகிய சிந்தை திருத்தலாம்
பருக லாம்பர மாயதோர் ஆனந்தம்
மருக லான்அடி வாழ்த்தி வணங்கவே.

மலையே வந்து வீழினும், மனிதர்கள் தமது அருந்தவ நெறியிலிருந்து விலகக் கூடாது. கலங்கி நிற்கக் கூடாது. மதம் கொண்ட கொலைக் குணத்துடன் தாக்க முற்படும் யானையும், இறைவனின் அடியார்களுக்கு (அன்பர்களுக்கு) எவ்விதத் தீங்கும் செய்யாது. அல்வினைகளிலிருந்து காக்கும் அரணாக இறையருள் நிற்கும். இறையருளால் தவம் பெருகும். பேதமை தீரும். திருகி இருக்கின்ற சிந்தை நேராக்கித் திருந்தும். மேன்மையானதோர் ஆனந்தம் பருகலாம். ஆனந்த வாழ்வு பெறலாம். மண்ணிலே பிறந்து இறந்து மண்ஆவதற்கு ஒருமைப்படுகின்றேனை, அண்ணல் ஆண்டு, தன் அடியரில் கூட்டிய அதிசயம் கண்டாமே என மாணிக்கவாசகருக்கு நிகழ்ந்த அதிசயம் இறையருளால் நிகழ்ந்தது. முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனை, பக்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம், சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட அத்தன் என மாணிக்கவாசகர் எழுதியிருப்பது அவர் பெற்ற இறையருளின் பயனாகும். சொல், செயல் இரண்டிலும் தூய்மை தேவை. வாழ்வின் தூய்மைக்கு இதுவே அடிப்படையாகும். தூய்மையான வாழ்விற்குத் தூய்மைகளின் தூய்மையாய் ஆதியும் அந்தமுமாய் இருக்கும் இறைவனின் திருவருள் தேவையாகும். ஒளியைக் கொண்டுதான் இருளைப் போக்க முடியும். இறையருளைக் கொண்டுதான் அஞ்ஞானம் போக்கிட முடியும். மெய்ஞானத்தால் அல்லவை தேய்ந்து நல்லவை உருப்பெறட்டும். மக்கள் வாழ்வு சிறக்கட்டும். உலகம் உய்யட்டும்; இறையருளே வாழ்வின் நெறியாய் மலரட்டும். வாழ்க வளமுடன்.

*ஓம் சிவாய நம*

*திருச்சிற்றம்பலம்*

# வள்ளலார் சுட்டும் ஜீவகாருண்ய ஒழுக்கம்

புலவர், ஆறு.மெ. மெய்யாண்டவன்

வடலூரில் 1865 இல் சன் மார்க்க சங்கம் நிறுவிய வள்ளலார் இங்கு வாழும் உயிர்கள் எல்லாம் பசி நீங்கி அறிவோடு வாழ வேண்டும் என விரும்பினார். அவ்விருப்பமே வள்ளலார் 1867 இல் சத்திய தருமச்சாலை நிறுவக் காரணம் ஆயிற்று. சத்தியதருமச் சாலை நிறுவிய வள்ளலார் பசியால் வாடும் ஏழைகள், முதியோர், மாற்றுத்திறனாளிகள் அனைவரும் உண்ண உணவு வழங்க ஏற்பாடு செய்தார். 24 மணி நேரமும் அணையா அடுப்பு; பசித்து வாடும் மக்களுக்கு மூன்று வேளை உணவு இன்றும் வடலூரில் வழங்கப்பட்டு வருகிறது. பிறகுதான் 1872 இல் சத்திய ஞானசபை நிறுவினார். வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர் இங்கு வாழும் மனிதருக்கெல்லாம் பயிற்றிப் பலகல்வி தந்து இப்பாரை உயர்த்திட வேண்டும் என்றான் பாரதி. இக்கூற்றை நன்கு உணர்ந்தவர் வள்ளலார்; அதனால் தான் வாடிய பயிர்களைக் கண்டு வாடினார். ஈடில் மாணிகளாய் ஏழைகளாய் இளைத்தவர்தமைக் கண்டு இளைத்தார். ஏழைமக்கள் மான உணர்வு மிக்கவராய் வள்ளலார் காலத்தில் வாழ்ந்திருந்தமையை மேற்கண்ட வள்ளலார் கூற்று நமக்கு உணர்த்துகிறது. உயிர் இரக்கமே ஜீவகாருண்ய ஒழுக்கம்; இந்த ஜீவ காருண்ய ஒழுக்கம் என்பது என்ன என்பதை வள்ளலார் கூறும் உரைநடை வரிகளால் அறிவோம்.

ஜீவகாருண்யம் எனும் தலைப்பின் கீழ் மொத்தம் பதினேழு கருத்துகளைக் குறிப்பிடுகிறார். அக்கருத்துகளுள் இன்றியமையாத கருத்துகளை இங்கே குறிப்பிடலாம்.

1. பசியென்கிற நெருப்பானது, ஏழைகள் தேகத்தினுள் பற்றி எரிகின்ற போது, ஆதாரத்தால் அவிக்கின்றது தான் (நீக்குவது) ஜீவகாருண்யம்.

2. பசி என்கிற விஷக்காற்றானது ஏழைகள் அறிவாகிய விளக்கை அவிக்கின்ற தருணத்தில் ஆகாரம் கொடுத்து அவியாமல் ஏற்றுகின்றதே ஜீவ காருண்யம்.

3. கடவுள் இயற்கை விளக்கத்திற்கு இடமாகிய ஜீவதேகங்கள் என்கிற ஆலயங்கள் பசியினால் பாழாகும் தருணத்தில் ஆகாரம்

கொடுத்து அவ்வாலயங்களை விளக்கம் செய்விப்பதே ஜீவகாருண்யம். உள்ளம் பெருங் கோயில் ஊன் உடம்பு ஆலயம் எனும் திருமூலர் கூறும் திருமந்திரச் செய்யுள் வரி இங்கு ஒப்பிடத்தக்கது.

4. நேற்று இராப் பகல் முழுதும் நம்மை அரைப் பங்கு கொன்றுதின்ற பசியென்கின்ற பாவி இன்றும் வருமே இதற்கு என்ன செய்வோம்? என்று ஏக்கங்கொள்ளுகின்ற ஏழை ஜீவர்களது ஏக்கத்தை நீக்குவதே ஜீவகாருண்யம்.

5. நடந்து நடந்து காலும் சோர்ந்தது; கேட்டுக் கேட்டு வாயும் சோர்ந்தது; நினைத்து நினைத்து மனமும் சோர்ந்தது. இனி இப்பாவி வயிற்றுக்கு என்ன செய்வோம்? என்று கண்ணீர் வடிக்கின்ற ஏழைகளுக்கு ஆகாரம் கொடுத்துக் கண்ணீரை மாற்றுவதே ஜீவகாருண்யம்.

6. கண், கை, கால் முதலிய உறுப்புகளில் குறைவில்லாதவர்களாகி, ஆகாரம் சம்பாதிக்கத் தக்க சக்தியுள்ளவர்களும், பசியால் வருந்தி இதோ படுத்திருக்கின்றார்கள். குருடும், செவிடும், ஊமையும் முடமுமாய் இருக்கின்ற நமக்கு ஆகாரம் எந்த வழியாற் கிடைக்கும்? பசி எப்படி நீங்கும்? எனத் தனித்தனி நினைத்து நினைத்துத் துக்கப்படுகின்ற ஏழைகளுக்கு ஆகாரம் கொடுத்துத் துக்கத்தை நீக்குவதே ஜீவகாருண்யம்.

7. பசியினால் வருந்துகின்றவர்கள் எந்தத் தேசத்தவராயினும் எந்தச் சமயத்தவர் ஆயினும் எந்தச் சாதியாராயினும் எந்தச் செய்கையர் ஆயினும் அவர்கள் தேச ஒழுக்கம் சமய ஒழுக்கம், ஜாதி ஒழுக்கம், செய்கை ஒழுக்கம் முதலானவைகளை வேறுபாடு கருதி விசாரிக்காமல் எல்லா ஜீவர்களிடத்தும் கடவுள் விளக்கம் பொதுவாக விளங்குவதை அறிந்து பொதுவாகப் பார்த்து அவரவர் ஒழுக்கத்திற்குத் தக்கபடி அவரவர் பசியை நிவர்த்தி செய்வதே ஜீவகாருண்யம். வருத்தத்தை மாற்றுவதே ஜீவகாருண்யம், வள்ளலார் வாழ்ந்த காலம் ஆங்கிலேயர் ஆட்சிக் காலம், இந்திய மக்கள் அடிமைகளாய் வாழ்ந்த காலம். அல்லல் உற்ற காலம். இந்தச் சூழலில் வள்ளலார் பசிக்குச் சோறளித்தல் எனும் பேர் அறத்தைச் சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கத்தின் மூலம் தமிழகம் எங்கும் பசிக்கு உணவளிக்க வேண்டும்.

எனும் அறத்தை மக்கள் பின்பற்ற வேண்டும் என்பதை நடைமுறைப்படுத்திய பேரருளாளர் வள்ளலார். அவர் பிறந்த நாள் அக்டோபர் 5 ஆம் நாள் வருகிறது. தனிப் பெருங் கருணை உள்ளமே உண்மையான இறை வழிபாடு என்பதை உணர்த்திய உயர்ந்த சான்றோராம் வள்ளலார் நெறிகளை உள்ளத்தில் கொள்வோம். புலைப் பசியும் தவிர்ப்போம் எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க.

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

## நான் மாடக்கூடல் ஆனது

வருணன் தனது வலிமை குறைந்தது கண்டு மிகவும் வெட்கப்பட்டான். கண்கள் சிவந்தன. கோபத்தீ அவனைக் காய்ந்தது. அவன் இன்னும் சோமசுந்தரப் பெருமானின் திருவிளையாடலைத் தெரிந்துகொள்ளவில்லை. ஆதலால் மீண்டும் தன்னுடைய ஏழு மேகங்களையும் கூப்பிட்டு மழைபெய்து மதுரையை அழிக்குமாறு ஏவிவிட்டான். ஏழு மேகங்களும் விரைவாகக் கிளம்பின. கருத்த உருவங்கொண்டு மேலே எழுந்தன மேகங்கள். மின்னலை விசிறின. திக்குகளும் ஆகாயமும் அதிர்ச்சி அடையும்படி இடித்து முழங்கின. பெரிய பெரிய ஆலங்கட்டிகள் விழுந்தன. பளிங்குத் தூணைப் போல மழைத் தாரைகள் கொட்டின. சப்த மேகங்களும் கூடி வானை மறைத்தன. பெரிய புயல்காற்று சுழன்று சுழன்று வீசியடித்தது. மதுரை மாநகரம் மேகங்களால் முற்றுகைமிடப்பட்டது.

அபிஷேக பாண்டியனும் மதுரை மக்களும் அன்றைய உலகம் அழிந்துவிடும் என்று நினைத்து மனம் கலங்கி வாட்டமடைந்தார்கள். நம்மை எல்லாம் காத்தருள வல்லவர் சிவபெருமானே என்று தெளிவடைந்து மக்கள் உடன்வர அபிஷேகபாண்டியன் திருக்கோவிலுக்குச் சென்றான். எம்பெருமான் திருவடியில் விழுந்து காக்கும்படி கெஞ்சி வேண்டினான்.

சோமசுந்தரக் கடவுள் உடனே தனது சடைமுடியிலுள்ள நான்கு மேகங்களையும் பார்த்து நீங்கள் சென்று இம் மதுரையம்பதியின் நான்கு எல்லைகளையும் சூழ்ந்துகொள்ளுங்கள். நான்கு மாடங்களைப்போல் அமைந்து ஏழு மேகங்களையும் விலக்கி

விடுங்கள் என்று ஆணையிட்டருளினார். நான்கு மேகங்களும் இறைவன் திருவாலண தாங்கி உடனே புறப்பட்டன. மதுரையின் நான்கு திசைகளிலும் சூழ்ந்து வளைந்து கொண்டன. இடைச்சந்து தெரியாவண்ணம், ஊரிலுள்ள மாடங்களையும் கோபுரங்களையும் தூண்களாகக் கொண்டு, ஒன்று சேர்ந்து மதுரை மாநகரத்தை ஒரு பெரிய கூடாரத்தைப்போல் மூடிக்கொண்டுவிட்டன. பாண்டியனும் மக்களும் பெரிய சந்தோஷம் கொண்டனர். மலையுச்சியிலே பெய்யும் மழைத்துளி உடைபட்டுச் சிதறிப்போவது போல, சிவபெருமான் அனுப்பிய மேகங்கள் சேர்ந்து செய்த மாடத்தின் மீது மழைத்துளிகள் வறண்டுவிட்டன. வருணதேவன் தோல்வியடைந்து நிரம்ப வெட்கமடைந்தான்.

வெட்கம் அடைந்து நின்ற வருணன் பயத்தால் மிகவும் நடுங்கினான். அவனது மானம் ஒடுங்கி விட்டது. ஆனாலும் அவனது மனத்துக்குள்ளே உள்ளூற ஒரு சந்தோஷம் ஏற்பட்டது. பொற்றாமரைத் தீர்த்தக் கரையை அடைந்தான். அதை அடைவதற்கு முன்பாகவே அவனுடைய வயிற்று நீர் வியாதி நீங்கி விட்டது. வருணன் பொற்றாமரைக் குளத்திலே ஸ்நானம் செய்து முடித்துச் சோமசுந்தரக் கடவுளைப் பூசிக்க எண்ணினான். மிகுந்த பயபக்தியோடு விபூதி உருத்திராட்ச மாலை எல்லாம் போட்டுக் கொண்டான். கங்கை முதலான மாதர்கள் தங்கக் குடங்களிலே வாசனை கலந்த திருமஞ்சனநீர் கொண்டுவந்து கொடுத்தனர். கற்பகத்தரு நல்ல பூக்கள், சந்தனம், வாசனைத் திரவியங்கள், ரத்தினங்கள் பதித்த தங்கப் பாத்திரங்கள், பொன்னாடை எல்லாம் எடுத்துக் கொடுத்தது; காமதேனு ஐந்து வகையான பழங்கள், பஞ்சாமிர்தம், பஞ்சகவ்யம், நைவேத்தியம், தூபம் எல்லாம் எடுத்துக் கொடுத்தது. வருணன் சோமசுந்தரப் பெருமானை முறை தவறாதபடி பூஜை செய்தான். இறைவனது ஆயிரம் திருப்பெயர்களைச் சொல்லி முத்துக்களால் திருவடிகளில் அர்ச்சனை செய்து வணங்கி நின்றான்.

வருணனது வழிபாட்டில் கடவுள் திருவுளம் மகிழ்ந்தார். வருணா! உனக்கு என்ன வேண்டும் என்று வினாவியருளினார். வருணன் மணி மந்திர ஔஷதங்களால் போகாத எனது வியாதி

தங்களது திவ்ய தீர்த்தத்திலே நீராடுவதற்கு முன்பே போய் விட்டது. தங்கள் அருமை பெருமைகளை அறியாத பேதை நான் தங்களைச் சோதனை செய்யத் துணிவு கொண்டேன். குணங்கெட்டவனான என்னிடமும் கருணை காட்டினீர்கள். இந்த அறிவு கெட்டவன் சோதனை செய்ததெல்லாம் நோய்க்கு மருந்தாகி விட்டது. எனது ஆணவம் நீங்கிவிட்டது. தங்கள் திருவருளால் எனக்கு உரியகாலத்தில் மோக்ஷம் கிடைத்துவிடும். எனக்கு இனி எதுவும் வேண்டாம். இந்தப் பொற்றாமரைத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தாலே எல்லா வியாதிகளும் நீங்கிவிடும். எளியேன் செய்த பிழைகளைப் பொறுத்தருள வேண்டும் என்று கூறிப் பலமுறை வணங்கி வரங்கள் வாங்கிச் சென்றான்.

நான்கு மேகங்கள் மலைபோல உயர்ந்து நான்கு மாடங்களாகக் கூடியதால் மதுரையம்பதி அன்றிலிருந்து நான்மாடக் கூடல் என்று பெயர் பெற்றது.

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### புகழ்

(ஈதலினால் வரும் புகழ்)

**1. ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது**
**ஊதியம் இல்லை உயிர்க்கு.**

ஈதல் - வறியவர்க்குக் கொடுக்க ; இசைபட வாழ்தல் - புகழ் தோன்றும்படியாக வாழ்க ; அதுவல்லது - அந்தப் புகழ் அல்லாது ; ஊதியம் இல்லை உயிர்க்கு - உயிர்களுக்கு வேறு பயன் இல்லை.

வறியவர்க்குக் கொடுத்து அதனால் புகழ் தோன்றும் படியாக வாழவேண்டும். அந்தப் புகழ் அல்லாது வேறு பயன் உயிர்களுக்கு இல்லை.

**2. உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கு ஒன்று**
**ஈவார்மேல் நிற்கும் புகழ்.**

உரைப்பவர் - பாராட்டிச் சொல்பவர்; உரைப்பவை எல்லாம் - சொல்பவை எல்லாம்; இரப்பார்க்கு - வறுமையால் பொருள் வேண்டி நிற்பவர்க்கு ; ஒன்று ஈவார்மேல் - ஏதேனும் ஒன்றைக் கொடுப்பவரிடம்;

நிற்கும் புகழ் - நிலைபெற்றுள்ள புகழ்.

வறுமையால் பொருள் வேண்டி நிற்பவர்க்கு ஏதேனும் ஒன்றைக் கொடுப்பவரிடம் நிலை பெற்றுள்ள புகழைத்தான் பாராட்டுபவர்கள் பாராட்டிச் சொல்லுவார்கள்.

**3. ஒன்றா உலகத்து உயர்ந்த புகழ்அல்லால்**
**பொன்றாது நிற்பதுஒன்று இல்.**

ஒன்றா - இணையில்லாத; உயர்ந்த புகழ் அல்லால் - ஈகையால் கிடைத்த புகழ் அல்லாமல் ; உலகத்து - இந்த உலகத்தில் ; பொன்றாது - அழியாமல் ; நிற்பது ஒன்று இல் - நிலைத்து நிற்பது வேறொன்றில்லை.

இணையில்லாத ஈகையால் கிடைத்த புகழ் அல்லாமல் இந்த உலகத்தில் நிலைத்து நிற்பது வேறோன்று இல்லை.

**4. நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்**
**போற்றாது புத்தேள் உலகு.**

நிலவரை - இந்த உலகத்தில் ; நீள்புகழ் ஆற்றின் - ஈகையைச் செய்து ஒருவன் நீண்ட புகழைப் பெறுவானாயின் ; புலவரை - ஞானிகளை ; போற்றாது - கருதாது ; புத்தேள் உலகு - தேவருலகம்.

இந்த உலகத்தில் ஈகையைச் செய்து புகழைப் பெறுவானாயின் தேவருலகம் அவனைப் போற்றும்; ஞானியைக் கூடப் போற்ற மாட்டாது.

**5. நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்**
**வித்தகர்க்கு அல்லால் அரிது.**

நத்தம் போல் கேடும் - அழிவது போலத் தோன்றும் கேடும் ; உளதாகும் சாக்காடும் - நிலைத்த புகழ் உள்ளதான சாவும் ; வித்தகர்க்கு - ஈகை அறிவுடையார்க்கு ; அல்லால் அரிது - அல்லாமல் பிறருக்கு அரிதாகும்.

அழிவது போலத் தோன்றும் கேடும் நிலைத்த புகழ் உள்ளதான சாவும் ஈகை அறிவுடையார்க்கே உரியன ; பிறருக்கு அரியதாகும். ஈகையால் வரும் கேடும், புகழும் அறிவுடையார்க்கே உண்டு.

**6. தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்**
**தோன்றலின் தோன்றாமை நன்று.**

தோன்றின் - பிறந்தால் ; புகழொடு தோன்றுக - புகழுக்கான பண்புடன் தோன்றுக ; அஃதிலார் - அப்பண்பு இல்லாதவர் ; தோன்றலின் - பிறத்தலை விட ; தோன்றாமை நன்று - மனிதனாய்ப் பிறக்காமல் இருப்பது நன்று.

மனிதனாகப் பிறந்தால் புகழுக்கான பண்புடன் பிறக்க வேண்டும் ; அப்பண்பு இல்லாதவர் மனிதராய்ப் பிறவாமல் இருப்பதே நன்று.

**7. புகழ்பட வாழாதார் தம்நோவார் தம்மை**
**இகழ்வாரை நோவது எவன்.**

புகழ்பட வாழாதார் - புகழ் உண்டாகும்படியாக வாழ மாட்டாதவர் ; தம்நோவார் - தம்மை நோவாமல்; தம்மை இகழ்வாரை - தம்மை இகழ்ந்து பேசுபவர்களை; நோவது எவன் - நோவது எதனால்?

புகழ் உண்டாகும் படியாக வாழ மாட்டாதவர் தமக்குத் தாமே நொந்து கொள்ளாமல் தம்மை இகழ்ந்து பேசுபவர்களை நோகச் செய்வது எதனால்?

புகழ் உண்டாகும்படியான செயலைச் செய்ய வேண்டும் என்பது கருத்து.

**8. வசைஎன்ப வையத்தார்க்கு எல்லாம் இசை என்னும்**
**எச்சம் பெறாஅ விடின்.**

வசைஎன்ப - குற்றம் என்று கூறுவர் ; வையத்தார்க்கு எல்லாம் - உலகத்துள்ளோர்க் கெல்லாம் ; இசை என்னும் எச்சம் - புகழ் என்ற எச்சத்தை ; பெறாஅ விடின் - பெறவில்லை என்றால்.

புகழ் என்ற எஞ்சி நிற்கும் சிறப்பைப் பெறவில்லை என்றால் உலகத்துள்ளோர்க் கெல்லாம் அது குற்றம் என்று கூறுவர்.

**9. வசைஇலா வண்பயன் குன்றும் இசைஇலா**
**யாக்கை பொறுத்த நிலம்.**

வசை இலா - குற்றம் இல்லாத ; வண்பயன் - வளமையான விளைச்சல் பயன் ; குன்றும் - குறைந்துவிடும் ; இசை இலா - புகழ் இல்லாத ; யாக்கை பொறுத்த நிலம் - உடம்பைச் சுமக்கின்ற நிலம்.

புகழ் இல்லாத உடம்புகளைச் சுமக்கின்ற நிலத்தில் குற்றம் இல்லாத வளமான விளைச்சலின் பயன் குறைந்து விடும்.

10. **வசை ஒழிய வாழ்வாரே வாழ்வார் இசைஒழிய
வாழ்வாரே வாழா தவர்.**

வசை ஒழிய - குற்றம் அல்லது பழி நீங்கி ; வாழ்வாரே வாழ்வார் - வாழ்பவர்களே உயிர் வாழ்பவர்கள் ஆவார்; இசை ஒழிய - புகழ் உண்டாகாமல் ; வாழ்வாரே வாழாதவர் - வாழ்பவர்களே உயிர்வாழாதவர்கள்.

தம்மிடம் பழி இன்றி வாழ்பவர்கள் உயிர் வாழ்பவர்கள் ; புகழ் உண்டாகாமல் வாழ்பவர்கள் உயிர்வாழாதவர்கள் (இறந்தவர்கள் ஆவர்).

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

24.09.2017 அன்று கோவிலூர் மடாலயத்தில் பல்வேறு கல்வி நிலையங்களைத் தொடங்கிய கோவிலூர் ஆதீனம் தெய்வத்திரு. நாச்சியப்ப சுவாமிகளைப் போற்றும் வகையில் சனாதன தர்ம உலகப் பல்கலைக்கழகங்களால் நடத்தப்பெறும் கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்கள் இணைந்து நிறுவனர் நாள் விழாவைக் கொண்டாடின.

விழாவிற்கு, கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமை தாங்கி ஆசியுரை வழங்கினார்கள். மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். சே.குமரப்பன் வரவேற்புரை ஆற்றினார். திரைப்பட இயக்குநர் எஸ்.பி.முத்துராமன் பேசுகையில் மாணவர்களுக்கு மதிப்பெண் மட்டும் முக்கியமல்ல. ஒழுக்கம் நாட்டுப்பற்று அவசியம். நம் நாட்டில் நாட்டுப்பற்று இல்லை. இதனால் தான் திரையரங்குகளில் தேசியகீதம் ஒலிக்கும் போது பலர் மரியாதை செய்வதில்லை. இது வருந்தற்குரியது. வாழ்க்கையில் ஒழுக்கமாக வாழத் திருக்குறள் வழிகாட்டும். நான் பள்ளியில் படிக்கையில் மாணவர் தலைவராக இருந்தேன். அப்பொழுது பள்ளி ஆண்டு விழாவிற்கு வந்த டாக்டர் மு.வரதராசனார் திருக்குறளின் அருமை பெருமைகளைக் கூறினார். அன்றிலிருந்து தினமும் திருக்குறளைப் படிக்கவும், நான் பங்கேற்கும் கூட்டங்களில் ஒரு திருக்குறளையாவது கூறுவது எனவும்

உறுதி பூண்டேன். அதன்படியே நடந்தும் வருகிறேன் எனத் திருக்குறளைக் கூறி விளக்கிப் பேசினார். மேலும் தனது திரைப்பட வாழ்க்கை அனுபவங்களைச் சுட்டிக்காட்டி மாணவர்களுக்குப் பல்வேறு அறிவுரைகளைக் கூறினார். ஒருமுறை ரஜினிகாந்த் நடித்த பிரியா படப்பிடிப்பிற்காக ஹாங்காங் சென்றிருந்ததாகவும், இது தொடர்பாக அந்நாட்டு அரசு அதிகாரிகளிடம் அனுமதி பெற ஆங்கிலத்தில் சரளமாக உரையாட முடியவில்லை. இதை எண்ணி வெட்கப்பட்டேன். நான் கல்லூரியில் படிக்கும் காலத்தில் ஆங்கிலத்தை ஒழுங்காகக் கற்றிருந்தால் இந்நிலை வந்திருக்காது. எனவே நீங்கள் படிக்கும் காலத்தில் அனைத்தையும் நன்கு கற்க வேண்டும் எனவும் கூறினார்.

நீதியரசர் மகாதேவன் பேசுகையில் தமிழ்மொழி, திருக்குறளின் சிறப்புக்கள், சங்ககாலப் புலவர்கள் கூறியவற்றைக் கோடிட்டுக் பேசினார். ஒவ்வொரு மதத்தினருக்கும் ஒரு மறைநூல் உண்டு. கிறித்தவருக்கு பைபிள், இசுலாமியர்க்கு குரான், இந்துக்களுக்கு பகவத்கீதை. ஆனால் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் சாதி, சமயம், மொழி, இறைவனைக் குறிப்பிடாமல் உலகம் முழுவதில் உள்ள அனைத்து மதத்தினரும் அனைத்து மொழியினரும் படிக்கும் வண்ணம் எழுதிய திருவள்ளுவர் ஓர் தீர்க்கதரிசி. எனவே உலகப்பொதுமறையாம் திருக்குறளைக் கடைப்பிடித்தாலே வாழ்வில் செம்மையாக வாழலாம். திருவள்ளுவர் கூறியபடி ஈதல் இசைபட வாழ்தல் எனும் குறள்படி வாழ்ந்தவர் நாச்சியப்ப சுவாமிகள் என்றார். மேலும் உலகப் புகழ்பெற்ற மரியா மாண்டிசோரி அம்மையார், திருமதி ருக்மணிதேவி அருண்டேல் ஆகியோரிடம் பணியாற்றி உலகின் பலநாடுகள் சுற்றித் தாம் ஈட்டிய பொருளையெல்லாம் தான் பிறந்த இப்பகுதி மக்களுக்கு ஈந்து பல்லாயிரம் மாணவர்கள் கல்வி பயில இசைபட வாழ்ந்தவர் நாச்சியப்ப சுவாமிகள் எனப் புகழாரம் சூட்டினார். பல நூற்றாண்டுகளுக்கு முன்பே சங்க காலப் புலவர்கள் யாதும் ஊரே யாவரும் கேளிர், தீதும் நன்றும் பிறர் தரவாரா எனக் கூறியுள்ளார். இதனைப் பின்பற்றி வாழ்ந்தாலே ஒழுக்கத்துடனும் அனைவரும் இணக்கத்தோடு வாழலாம் என்று பேசினார். நாச்சியப்ப சுவாமிகளின்

குருபூசையை முன்னிட்டு மழலையர் பள்ளி முதல் கல்லூரி வரை நடத்தப்பெற்ற போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகளையும், சான்றிதழ்களையும் வழங்கினார். கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி முதல்வர் டாக்டர் ரவீந்திரன் நன்றி கூறினார். பல்வேறு கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள், தலைமை ஆசிரியர்கள், நகர்ப்பிரமுகர்கள், வழக்கறிஞர்கள், பெற்றோர்கள் பங்கு பெற்றனர்.

27.09.2017 அன்று கோவிலூர் மடாலயத்தின் 12ஆவது ஆதீனம் நாச்சியப்ப சுவாமிகள் குருபூஜை சிறப்பாக நடைபெற்றது. நாச்சியப்ப சுவாமிகள் சமாதிக் கோவிலில் அபிஷேகம் நடந்து அலங்காரம் செய்து தீபாராதனைகள் காண்பிக்கப்பெற்றன. அன்னதானமும் நடைபெற்றது. திருவாசகக முற்றோதல் மற்றும் கைவல்ய நவநீதம் சத்சங்கம் நடைபெற்றன. குருபூஜை விழாவை ஒட்டிக் கருத்தரங்கம் ஒன்று கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. காப்பியக் கவிஞர் நா.மீனவன் நாச்சியப்ப சுவாமிகளின் ஆன்மீகப் பணிபற்றியும், பேரா. ம.கார்மேகம் கல்வித்தொண்டு பற்றியும், அழகப்பா மாதிரி மேல்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் அருணாசலம் பொதுத்தொண்டு பற்றியும் பேசினர். சாதுக்கள், மடாலய அறக்கட்டளை உறுப்பினர்கள் நாராயணன், ராமனாதன், மடாலய கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் நற்கதை நம்பி அய்க்கண் மற்றும் கல்வி நிலையங்களின் முதல்வர்கள், ஆசிரியர்கள் பங்கு பெற்றனர்.

09.10.2017 - 10.10.2017 அன்று கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரியில் தமிழ்நாடு விளையாட்டு மற்றும் உடற்பயிற்சிப் பல்கலைக்கழகத்தில் இணைப்புப் பெற்ற கல்லூரிகளுக்கு இடையேயான ஆண்கள் கைப்பந்து போட்டி இரு நாள்கள் நடைபெற்றது. இப்பல்கலைக்கழகத்தில் இணைப்புப் பெற்ற ஒன்பது கல்லூரிகள் போட்டிகளில் கலந்து கொண்டன. இவ்விளையாட்டுப் போட்டிகளைக் கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி முதல்வர் ரவீந்திரன் தலைமையில் கோவிலூர் ஆதீனம்

மெய்யப்ப சாமிகள் முன்னிலையில் கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் தொடங்கி வைத்தார். சென்னை ஒய்.எம்.சி.ஏ. உடற்பயிற்சிக் கல்லூரி அணி முதலிடத்தைப் பிடித்து வெற்றி பெற்றுக் கோப்பையைப் பெற்றது. தமிழ்நாடு உடற்பயிற்சி மற்றும் விளையாட்டுப் பல்கலைக்கழக அணி இரண்டாமிடம் பெற்று ரன்னர் கோப்பையைப் பெற்றது. வெற்றி பெற்ற அணி மற்றும் வீரர்களுக்குக் கோப்பை, பதக்கங்கள் மற்றும் சான்றிதழ்களைக் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் வழங்கினார். கல்லூரி முதல்வர்கள் டாக்டர் ரவீந்திரன், டாக்டர் செல்லப்பா, மாயாண்டி ஆகியோர் பங்கு பெற்றனர்.

## கைவல்ய நவநீதம் - தத்துவ விளக்கப் பாடல்
### (கவி எண்.5 ல் பவமறு ஞானதீர்த்தத்திற்கு ஆராய்ச்சி உரை - தொடர்ச்சி
### பா. வெங்கடராமன்)

அதேபோல, கருமத்தின் அடிப்படையிலும் சீவர்கள் பிறவி எடுக்கிறார்கள்; அதாவது ஒவ்வொரு செயலுக்கும் ஒவ்வொரு பலாபலன் உண்டு. அந்தப் பலனை அனுபவிப்பதற்காகப் பிறவி எடுக்க வேண்டும். தாயுமானவர் சுவாமிகள், ஊரனந்தம் பேர் அனந்தம் சுற்றும் உறவனந்தம் வினையினால் உடலனந்தம் செய்யும் வினை அனந்தம் கருத்தோ ஆனந்தம் என்று குறிப்பிடுகிறார். அதாவது வினையினால் உடல் அனந்தம் என்றால் சீவர்கள் செய்கின்ற வினையினால் சீவர்களுக்குப் பலபிறவிகள் உண்டாகின்றன. எனினும் பிறவி எடுத்த பின்பு வந்த உடலைக் கொண்டு செய்கின்ற வினைபல அதாவது வினையினால் உடல் அதனால் செயல் அதனால் மீண்டும் உடல் மீண்டும் வினை என்று ஒரு சுழற்சி முறையைக் குறிப்பிடுகிறார். ஆகவே சீவர்கள் கருமத்தினால் பிறவி எடுக்கிறார்கள் என்றாகிறது.

காமம், கருமம் இந்த இரண்டினாலும் உண்டாகும் பிறப்பானது சீவர்களின் இச்சையினால் உண்டாகிறது. இவற்றை மாற்றினால் இவைகளால் ஏற்படுகிற பிறவியைப் போக்கிக் கொள்ளலாம். அதாவது ஆசையினால் உண்டாகின்ற பிறவியை நிராசையான மனத்துடனும்

பற்றற்ற மனத்துடனும், விராகம் அல்லது வைராக்கியத்துடனும் இருப்பதனால் போதும் என்ற மன நிறைவுடன் வாழும் போதும் இதனால் உண்டாகின்ற பிறப்பைத் தவிர்க்கலாம். அச்சுததாச சுவாமிகள் பாடும்போது

**போதும் போதும் பொருளுந் தேகம்**
**பூவைமோகம், புவன போகம் - (போதும்)**
**யாதும் ஓர் நலன் பேதையோர்ந்திலன்**
**நீதில் அந்தர்யாமி சாமி - (போதும்)**

என்று பாடுகிறார்.

அதே போல, கர்மத்தினால் உண்டாகும் பிறப்பை, கர்மயோகமாகச் செய்யும் போது அல்லது பலனின் பற்றற்றுச் செய்யும் போதும் அல்லது ஈஸ்வரார்ப்பணமாகச் செய்யும் போதும் கர்மத்தால் உண்டாகும் பிறப்பைத் தவிர்க்கலாம்.

ஆனால் மூன்றாவதாக உள்ள அஞ்ஞானத்தினால் வரும் பிறப்பைத் தவிர்ப்பது மிகவும் கடினமாகும். ஏனெனில் அஞ்ஞானம் என்றால் என்னவென்றே தெரியாது. அந்த அளவிற்கு அஞ்ஞானத்தின் வலிமை அதிகம். அதனால் தான் கைவல்யநவ நீதத்திலே வருகின்ற குருவானவர்.
சீடனைப் பார்த்து

உன்னை நீ அறிந்தாயாகில் உனக்கு ஒரு கேடுமில்லை
என்றதும், சீடனானவன் சற்றே உணர்ச்சிவயப்பட்டவனாக
என்னைத்தான் சடனா உள்ளத்து எண்ணியோ சொன்னீரையா

என்று கூறுகிறான். ஒருவரைப் பார்த்து நீயார்? என்று கேட்டால் நான் இன்னார், இன்னார் மகன், என் பெயர் இது, நான் இந்த உத்தியோகஸ்தன், இந்தத் தொழில் செய்பவன், இன்ன குலம், இன்ன கோத்திரம் என்று எல்லாம் சொல்வார். அதை நினைத்துத்தான் அந்தச் சீடனும் என்னை என்ன மூடன் என்று நினைத்தா/ சொல்கிறீர்கள் என்று அறியாமையினால் கேட்கிறான்; உண்மையில் அவையெல்லாம் இந்த உடலுக்கான அடையாளங்கள்; முகவரிகளே தவிர அது அந்தக் கேள்விக்கான பதில் அல்ல. அதாவது ஒரு காகிதத்திலோ, அஞ்சல் அட்டையிலோ ஒரு முகவரியை எழுதினால்

அது அந்த முகவரியில் உள்ள வீடாகுமா? ஆகாது; அதுபோலத்தான் மேலே சொன்ன அடையாளங்களும். அது மட்டுமல்ல; அச்சீடன் அதோடு நின்றிருந்தால் பரவாயில்லை, ஆனால் அவன் தன் அஞ்ஞானத்தை வெளிப்படுத்தியதோடு அல்லாமல் அதனை உறுதி செய்வதாக, மேலும் குருவைப்பார்த்துக் கேட்கிறான்.

தன்னைத் தான் அறியாமாந்தர் தரணியில் ஒருவர் உண்டே என்று. ஆக அஞ்ஞானம் என்பது தன்னை அறியாததாகும். அதனால் தான் பிறப்பு உண்டாகிறது. இந்த அஞ்ஞானம் எப்போது உண்டானதென்று தெரியாது. அநாதிகாலம் தொட்டே வருகிறது. அதைத் தான் தாண்டவராய சுவாமிகளும், இந்த அஞ்ஞானத்தைத் குறிப்பிடும் போது பிரமமாம் தனை மறந்த பேதமையே அஞ்ஞானம் என்று குறிப்பிடுகிறார். பேதமையே எனத் தேற்றேகாரம் போட்டுச் சொல்வதால் அஞ்ஞானம்தான், அஞ்ஞானம் மட்டும் தான் பிறப்பிற்குக் காரணம் என்று குறிப்பிடுகிறார். வள்ளுவரும்,

பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்றும்
செம்பொருள் காண்பது அறிவு. என்கிறார். பிறப்பு என்பதே

அறியாமை (அ) அஞ்ஞானம் என்கிறார்; அதாவது பிறப்பே அஞ்ஞானம், அஞ்ஞானம் பிறப்பு என்றும் அஞ்ஞானம் என்றும் வேறில்லை, பிறப்பு என்பது வேறில்லை, இரண்டும் ஒன்றே என்று குறிப்பிடுகிறார். ஆக சீவர்களின் பிறவிக்குக் காரணம் அஞ்ஞானம் ஆகும்.

ஆகவே பவம் என்ற சொல்லுக்கு வாக்யார்த்தம் பிறப்பு என்று கொண்டும், இலட்சியார்த்தம் அஞ்ஞானம் என்றும் பொருள் கொள்ளலாம்; அவ்வாறு பொருள் கொள்வதால், விட்டலட்சணையின் படிப் பிறப்பை விட்டுவிட்டு அஞ்ஞானத்தைப் பொருள் கொள்ள வேண்டும். அதன்படி பார்த்தால் பவமறுஞான தீர்த்தம் படிந்திடப் பதறினானே என்ற பாடல் வரி எவ்வாறு அமைகிறதென்றால் அஞ்ஞானம் நீங்க ஞான தீர்த்தத்தில் படிந்திடப் பதறினானே என்று அமைகிறது.

ஆகவே அஞ்ஞானம் எதனால் நீங்கும் என்றால் ஞானத்தினால் நீங்கும்; ஞானம்வந்தால் எது போகும் என்றால்

அஞ்ஞானந்தான் போகும். மேலும் இப்பாடலில் பதறினானே என்னும் போது, எதற்காகப் பதறினான், பதறி என்ன செய்தான் என்ற கேள்வி எழுகிறது. தாபத்திரியத்தால் பதறினான் இந்தத்தாபத் திரயம் ஏன் வந்தது? இதற்கு என்ன காரணம், இது போக்கும் உபாயம் யாது, இதைப் போக்கும் குருயார்? அவர் எங்கு இருக்கிறார். அவரை எப்படி அடைவது என்று பலவாறாகப் பதறினான் என்று பொருளாகிறது. ஆகவே இந்த அதிகாரியானவன் தன் அஞ்ஞானம் நீங்கிட ஞான ஒளிபெறக் குருவை அடையப் பதறினான் எனக் கொள்ளலாம். இந்த அதிகாரியின் நோக்கம் அஞ்ஞானம் நீங்குவது மட்டும் அல்ல; இந்தத் தாபத்திரயத்திற்குக் காரணமான பிறப்பு நீங்க வேண்டும் என்பதுதான் முக்கிய நோக்கம். பொதுவாக, சீவர்கள் எந்த ஒரு விசயத்திலும் அதனால் பலன் இருக்கிறதா என்று தான் பார்ப்பார்கள்; அந்த விதத்தில் இந்த அஞ்ஞானம் நீங்குவதனால் என்ன பலன் என்று மேற்கொண்டு விசாரம் செய்யலாம்.

இந்த அஞ்ஞானம் அவ்வளவு எளிதில் நீங்குமா? என்றால் நீங்காது. இது தொடர்பாக உபநிடதம் நூலில் உள்ள ஒருபாடலின் பொருளைக் காண்போம்.

மொய்த்தாரும் சாட்சிக்கும் சரீரமான மூன்றினுக்கும் அந்நியமும்
முடிவும் கூறில்
கர்த்தாவாம் சாட்சிக்கு ஞானத்தாலே காரணமாந் தேகம் அந்தக்
கணத்தில் நாசம்.
தொத்தாய காரணதேகந்தான் ஒன்று தொலைவதன் முன் சூக்கும
தேகம் கோடி
யொத்தாய பிரளயத்தில் ஒடுங்கும் சூக்குமம் ஒன்று ஒடுங்கும் முனம்
அனந்தம் ஒடுங்கும் தூலம்

என்ற பாடலில் காரணதேகம் அதாவது அவத்தை (அ) அஞ்ஞானம் ஞானத்தினால் அந்தக் கணத்தில் நாசமடையும் என்றும் அஞ்ஞான தேகம் தொலைவதன் முன் சூக்குமசரீரம் மனம் முதலான 20 தத்துவங்கள் அடங்கிய தேகம் கோடி பிரளயத்தில் நடுங்கும் என்று சொல்லப்படுகிறது. பிரளயம் என்றால் பிரமாவின் நூறு வயது முடிவடையும் போது சர்வ ஆகாசாதி பூதங்களும் ஒடுங்குவதாகும். அந்தக் கால எல்லைக்குள் அளவில்லாத சூட்சும சரீரங்கள் (ஒரு

சீவனுக்கு மாத்திரம்) தோன்றி ஒடுங்குகிறது. ஒரு சூட்சும சரீரம் ஒடுங்குவதற்குள் பலதூல தேகங்கள் ஒடுங்குகின்றன. இப்படிப் பல சரீரங்கள் ஒடுங்கி அந்தந்தப் பிறவிகளில் மேற் சொன்ன தாபத் திரயங்களில் வேதனைப்பட்டு, சிரவணாதிகள் செய்து யார் முயற்சி செய்கிறார்களோ அவர்களுக்கு ஞானம் உண்டாகி அஞ்ஞான தேகம் நீங்கும் என்று சொல்லப்படுகிறது.

பிரமமாம்தனை மறந்த பேதமையே அஞ்ஞானம் என்று கைவல்ய நவநீதம் சொல்வதால், பிரமத்தை அறிவது தொடர்பாக பிரமசூத்ரத்தில் தெரிவித்துள்ள கருத்துக்களை 3 சூத்ரத்தின் வாயிலாக எளிய உரையின் மூலம் அறிவோம்.

***சூத்ரம்1*** அதாதோ பிரம்ம ஜிஞ்ஞாசா, பிரமத்தை வடமொழியில் உள்ளவாறு பொருள் அறிவதில் ஆர்வம் (அ) இச்சை ஆர்வம என்று சொல்லும் போது அதற்கான முயற்சியையும் விசாரணையையும் குறிக்கிறது. பிறகு என்று சொல்லும் போது எதற்குப் பிறகு என்று கேள்வி எழுவதால் கற்றதற்குப் பிறகு என்று பொருள் கொள்ளலாம். ஏனெனில் வள்ளுவர் - திருக்குறளில் கற்றதனாலாய பயன்என் கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்,

என்று சொல்லும் போது கற்றதன்பயன் வாலறிவன் - பேரறிவாளன் - பிரமசைத்தன்யத்தை வணங்க வேண்டும் என்கிறார்; எதனால் (அ) ஏன் பிரமத்தை வணங்க வேண்டும் என்றால்

***சூத்ரம் 2ல் :*** ஜன்மாதி அங்ய யதக - (அதனால்) பொருள் பிறப்பு இறப்பு இவற்றினால் அதாவது, நாம் பிறந்து இறந்து சம்சார பந்தத்தில் உழல்வதனால் இதற்கு என்ன பிரமாணம் என்றால் அடுத்த.

***சூத்ரம் 3ல் :*** சாஸ்த்ர யோனித்துவாத் - அதாவது கருத்தா பிரமாணம் (பொருள்) - இதனைத் திருக்குறள் பாடலுடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாராநெறி

அதாவது கற்க வேண்டிய நூல்களைக் கற்று மெய்ப்பொருள் கண்டவர்கள் - அதாவது உண்மைப்பொருள் - சத்திய ஞான அனந்த

ஆனந்த பிரமத்தை உணர்ந்தவர்கள் மீண்டும் இவ்வுலகில் பிறந்து இறந்து வருகின்ற அந்த வழியில் - அந்தநெறியில் வரமாட்டார்கள் என்று கூறுகிறார். அதாவது பிரமத்தை அறிந்தால் உணர்ந்தால் மீண்டும் பிறவா நிலையை அடையலாம் என்று பொருள்.

இதனை ஞான வாசிட்டப் பாடலுடன் ஒப்பிட்டுப் பார்ப்போம்

நிருவிகற்ப ஆன்மாவில் சகத்தோற்ற ஒடுக்கம் இவை நேராயில்

மருவிகற்ப பேதமுறா பராபரமாம் அப்பொருளை வயங்கக் கண்டால்

பெருமனக் கட்டறும் ஐயமறும் கருமமறும் என்றான் பெரிய வள்ளல்

ஒரு கருதில் பொன்மேரு புகில் அன்றோ பிரமாண்டம் ஒடுங்கும் என்றான்

இதில் பெருமனக் கட்டறும், அதாவது மனத்தினுடைய கட்டு - பந்தம் அறும், நாம் இந்த சரீரம், நான் பிறப்பு இறப்பு உடையவன், சம்பந்தத்தில் உள்ளேன் என்ற பந்தம் உடல்மீதான அபிமானமும் நீ நான் ஆன்மாவா பிரமம் ஆவேனோ என்கிறார்; ஐயம் நீங்கக் கருமம் நீங்கும், அதாவது பிறப்புக்குக் காரணமான சஞ்சிதவினை நீங்கும், பிறப்பு என்னும் விதைக்கான சேமிப்புக்கிடங்கு - சஞ்சித வினைகள் நாசமடையும். அதனால் பிறப்பு நீங்குகிறது.

ஆகவே ஞானத்தினால் அஞ்ஞானம் நீங்குகிறது. அஞ்ஞானம் நீங்குவதனால் இந்தஉடல் நான் என்ற அவிமானம் நீங்குகிறது. அதாவது யான் எனது என்ற செருக்கு நீங்குகிறது. பிறப்பிறப்பாகிய சம்சார பந்தம் நீங்குகிறது. பிறப்புக்கான இருப்பு இன்மையால் பிறப்பு நீங்கும்.

எனவேதான், தாண்டவராய சுவாமிகள் பவமறு ஞான தீர்த்தம் படிந்திடப் பதறினானே என்று கூறியுள்ளார்.

ஆகவே ஞானத்தினால் அஞ்ஞானம் நீங்கும் - அது நீங்கினால் பிறப்பு நீங்கும்; ஆகவே மீண்டும் பிறவா நெறியை அடையலாம்.



**Available Knitted Fabric** (On Order Basis)

| | |
|---|---|
| 18 GG Rib | Dia : 11 - 36 |
| 24 GG Single Jersey | Dia : 16 - 36 |
| 28 GG Single Jersey | Dia : 18 - 34 |
| 28 GG SJ Openwidth | Dia : 30 - 34 |

**Hosiery Yarn Available**

**PC / PV / 100 % COTTON / SLUB / VISCOSE**

***THE PARADISE KNITTERS***

2/311, Periyandipalayam Pirivu,
6th Cross, Hare Rama Hare Krishna Nagar
Mangalam Road, **TIRUPPUR - 641 687**
Mobile : 98652 04051 , 98651 22844 , 98422 70168

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் “திருநெல்லை”**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

கோவிலூர் – காரைக்குடி – 630 307.

தொலைபேசி : **04565 - 234 523** கைபேசி : **94435 02017**

**பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:**

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education
- M.Com
- M.Sc (Computer Science)

M.Com., M.Sc., முதுகலை பட்டப்படிப்பிற்கு
அழகப்பா பல்கலைக்கழகத்தில் அனுமதி பெற்றுள்ளோம்.
மாணவர் சேர்க்கை நடைபெறுகிறது

**B.Sc. Visual Communication.,**
(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!